வளமுடன் வாழ! ஒன்றாக நல்லது கொல்லாமை வரமருள் வேலா!!

விலை ரூ. 10.00

# கௌமார அமுதம்

ஒளி : 21
கதிர் : 12



கௌமார மடாலய நிகழ்ச்சிகளை நேரலையில் காண

**சுபகிருது ஆண்டு மாசி மாதம் (பிப்ரவரி-2023)**



## மாசி 19ஆம் நாள் 3-3-2023 வெள்ளிக்கிழமை
## சாந்தலிங்க சுவாமிகள் திருக்கோயில்
# திருக்குட நீராட்டு விழா, பேரூர்

மெய்ப்பத்து விதமுற்ற வேதாந்த சித்தாந்தம்
விரவு சமரச மாண்புதோய்
வித்தகச் சாந்தலிங்கத் தவக்குரி சிலையுள்
விறைவுடன் காத்தமையவே.
தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

சிறப்பாசிரியர்
திருப்பெருந்திரு. இராமானந்த குமரகுருபர சுவாமிகள்

ஒன்றாக நல்லது கொல்லாமை

# கௌமார அமுதம்

திருவள்ளுவராண்டு 2053
சுபகிருது மாசி
ஒளி : 21 கதிர் : 12
2023 பிப்ரவரி

திருப்பெருந்திரு. **இராமானந்த குமரகுருபர சுவாமிகள்**
சிறப்பாசிரியர்
***

**ஆசிரியர் குழு**
அழ. முத்துப்பழனியப்பன்
கு. சிவலிங்கம்
கா. உமாபதி
***

**நிழற்படம்**
பெ. ரமேஷ்
***

**அச்சிட்டோர் :**
ருக்மணி ஆப்செட் பிரஸ்
E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
கோயம்புத்தூர் - 641 021.
போன் : 0422 2672789

## பொருளடக்கம்



சந்தா விபரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ.10.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ.100.00 |
| ஆயுள் சந்தா | ரூ.1000.00 |

கௌமார அமுதம்
ஆசிரியர், கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி (அஞ்சல்)
கோவை - 641 049. போன் : 2666370
இணையதளம்: *www.kaumaramutt.org*
மின் அஞ்சல்: *kaumaramutt@gmail.com*

**உங்கள் சிந்தனைக்கு......**

அறம்முதலா முன்னோர் அறைந்தபயன் நான்கின்
திறம்விரிந்துச் சொல்லுந் தெளிந்து.

- வருக்கக் குறள்

அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கின் பயனை தெளிவாக விளக்குவதே சிறந்த நூலின் பயனாகும்.

# மறைமொழி

இராமானந்த குமரகுருபர சுவாமிகள்
சிறப்பாசிரியர்

சென்ற இதழின் தொடர்ச்சி:

முக்கியமாக, திருப்புகழ் பாடல்களில் பல்வேறு இடங்களிலும் பெண்கள் பற்றியும் பெண்களால் தாம் பட்ட அவலங்கள் பற்றியும் ஆண்களை மயக்கும் பெண்களின் அவயவங்கள் மற்றும் அவர்களின் நடத்தைகள் பற்றியும் பலவாறாகப் பேசியுள்ளார் உதாரணமாக,

**மானார் கனி வாய் உகந்து சிக்கெனவே அணைந்து**
**கைப்பொருளே இழந்து அயர்வாயே**

இவ்வாறு ஏராளமான திருப்புகழ்களைப் பார்க்கலாம்.

**காமியத் தழுந்தி ...... யிளையாதே**
**காலர்கைப் படிந்து ...... மடியாதே**

என சுவாமி மலைத் திருப்புகழில் இயற்றியிருப்பார்

சிரவை ஆதீனம் ஆதிகுரு முதல்வர் தவப்பெருந்திரு இராமானந்த சுவாமிகள் பெண் விசய வெண்பாவில்

**பெண்ணாலே கெட்டொழிந்த பேரை அளவுஉரைக்க**
**ஒண்ணாதே உன்மதில் உற்றுப்பார்; பெண்ணாரைத்**
**தீண்டுவதிலும் கொடிய தீவிடத்தை உண்டேனும்**
**மாண்டுவிழ மேன்மை வரும்**

அதே நேரத்தில் மனிதனை காமத்தில் இருந்து வெல்ல வழிவகையும் சுவாமிகள் கூறியிருப்பார்.

**மந்திரத்தில் ஆர்க்கும் அடங்காது மாது எனும்பேய்;**
**தந்திரத்தில் வெல்லத் தகும் கண்டாய்; சொந்தம்உறு**
**தாய் என்று அனைவரையும் தன் மனத்துள் தங்கவைத்தால்**
**மாயாமல் வைக்கும் மருந்து.**

மேலும் சுவாமிகள் பல இடங்களில் இக்கருத்தினை வலியுறுத்தியுள்ளார்.

தமது திருவுந்தியார் (உந்தித் தாழிசைகள்) செய்யுற்பாவில்

**காமவினையைக் கருத்தில் விடுவோர்க்குச்**

**சேமம் அளிப்பான் என்று உந்தீபற**

**சிறப்பைத் தருவான் என்று உந்தீபற**

என்று பாடியிருப்பார்.பெண்மையின் சிறப்பைப் பல இடங்களில் போற்றிய ஔவைப் பிராட்டியின் தனிப்பாடல் திரட்டில்

**பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்**

**எத்தாலுங் கூடி யிருக்கலாம் சற்றேனும்**

**ஏறுமா றாக விருப்பாளே யாமாகில்**

**கூறாமல் சன்னியாசங் கொள்.**

எனப் பாடியிருப்பார் அன்புடைய மனைவியுடன் வாழ்வது வாழ்வாகும். அத்தகைய வாழ்வு இல்லை என்று நிலை ஏற்படும் போது வாழ்வதைவிட சந்நியாசம் கொள்வது மேல் என்று ஔவைப் பிராட்டி கூறியிருப்பது சிறப்பு.

உலக இன்பங்கள் யாவும் நிலையில்லாதவை அவற்றை விரும்பியே மனம் தேடுகிறது. அவற்றிலிருந்து விடுபட்டு வாழ வேண்டும் என்ற தன் விருப்பத்தை இறைவனிடம் சுவாமிகள் விண்ணப்பிக்கிறார்.

ஐம்புலனையும் அடக்கி ஆள்வோரால் மனதினை அடக்க இயலாது போகும் இந்தக் காமம் என்னும் பிணியால் அதனால் அதற்கு இறைவன் துணையே வேண்டும் என்பதை சுவாமிகள் இப்பாவால் எடுத்துரைக்கின்றார்.

இவ்வாறாக முருகப்பெருமானிடம் எத்தகைய துன்பமின்றி நரகம் அடையாது கந்தா நின் பொற்பாதங்களைச் சரணடைய வழிவகை செய்வாயாக என்று கந்தசாமி சுவாமிகள் வேண்டுவதாக அமைந்துள்ளது.

**தென் மலி நந்தி, அயன் சிறை விடுப்பச்**

**செப்பியும், விடாது, அரன் வேண்டத்**

**தன்மம் ஆர் உபதேசம் புரி இரங்க**

**சாமியூர்த் தண்டபாணியனே!**

பிரம்மனை சிறையிட்ட விபரத்தை அறிந்து கொண்ட சிவபெருமான் நந்திதேவரைக் கூப்பிட்டு “நந்தி தேவனே! நீ இப்போதே என் குமாரனான கந்தனிடம் சென்று என் உத்தரவின் பேரில் என் வார்த்தைகளால் அவனைத் திருப்திப்படுத்தி உலகப் படைப்புக்கு பாதிப்பு ஏற்படா வண்ணம் பிரும்மதேவனை விடுவிக்கும்படி சொல்லிவிட்டு வா!” என்று கூறியனுப்பினார்.

நந்திதேவரும் சிவபெருமானின் கட்டளைப்படியே கந்தகிரியை நோக்கி விரைந்து சென்று, அங்கிருந்த பாலமுருகனை, துதிகளால் வணங்கி வழிபட்டுப் பலவிதமாக அவரை மகிழ்ச்சியடையச் செய்தார். பிறகு அவர் “கந்தப் பெருமானே! தங்களுடைய தந்தையின் கட்டளைப்படி, உலக சிருஷ்டி முன்போலவே நடந்து வருவதற்காகப் பிரும்ம தேவனை சிறையிலிருந்து விடுதலை செய்யவேண்டும்“ என்று கூறி கரங்கூப்பி நின்றார்.

கந்தனோ அளவு கடந்த கோபத்தோடு நந்திதேவரைப் பலவாறாகவும் அதட்டி மிரட்டி, “நந்திதேவனே! மரியாதையாக நீ வந்தவழியே திரும்பிப் போய்விடு. இல்லாவிட்டால் நீயும் பிரும்ம தேவனுக்குத் துணையாகச் சிறைவாசம் அனுபவிக்கும்படி நேர்ந்துவிடும்!” என்றார். அத்தகைய கடுமையான வார்த்தைகளைக் கேட்டதும் நந்திதேவர் மிகவும் நடுநடுங்கி, அங்கிருந்து வேகமாகக் கிளம்பிச் சென்று சிவபெருமானின் இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்தார். தான் முருகரிடம் சென்றுவிட்டு வந்த விபரங்களை மகாதேவரிடம் அவர் எடுத்துச் சொன்னவுடன், சிவபெருமான் புன்னகை பூத்த வதனத்தோடு தலையை அசைத்துப் பெரிதும் வியப்பில் ஆழ்ந்தார்.

“என் அருமைக் குமாரா! என்னுடைய கட்டளையின்படி நான்முகனைச் சிறையிலிருந்து விடுதலை செய்துவிடு! உலக படைக்கும் தொழிலுக்கு இடையூறு எதுவும் ஏற்படாமல் இருக்க. வேண்டியது மிக மிக அவசியம்! நம்முடைய முதல் காரியமே உலகைச் படைப்பதுதானே? அதற்கு இடையூறு வரும்படி நாமே செய்யலாமா?சிவபெருமானின் இத்தகைய வார்த்தைகளைக் கேட்ட பிறகும் கூட முருகப்பெருமான் மனம் தளர்ந்து பிருமதேவனைச் சிறையிலிருந்து விடுதலை செய்யவில்லை. அதனால் தன் மகனின்மீது தந்தைக்கு அடங்காக் கோபம் ஏற்பட்டு விட்டது. அச்சமயம் அவருடைய உள்ளத்தில் அன்பு, கோபம் இவ்விரண்டும் ஒருசேரக் கிளர்ந்தெழுந்தன. அந்த மனதில் முதலில் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது புதல்வனின் மீது பாசம் என்றாலும், அதன் பிறகு முளைவிட்டிருந்த கோபமே அதிகச் சக்தி வாய்ந்ததாக உருவெடுத்தது. கோபத்திற்குக் கட்டுப்பட்டு விட்ட மகாதேவன் தன் குமாரனை நோக்கி. “குழந்தாய் முருகா! உனக்கு ஒன்றுமே தெரியவில்லை! அதனால்தான் இப்படி என் வார்த்தையையே தட்டி நடக்க முயல்கிறாய்!! என் உத்தரவுப்படி நான்முகப் பிருமனைச் சிறையிலிருந்து விடுவித்துவிடு! இதற்காக உன்னிடம் நான் சற்று

முன்பாக அனுப்பிவைத்த நந்தி தேவனையும் நீ அலட்சியப்படுத்தித் திருப்பி அனுப்பிவிட்டாய்! ஆனால் இனியும் அப்படி இருப்பது நல்லதல்ல! பிரும்மாவை உடனடியாக விடுதலை செய்!'' என்று கூறினார்..

தந்தையின் கட்டளைக்குக் கட்டுப்பட்ட முருகனும் தன் சேவகர்களைக் கொண்டு பிரும்மதேவனை அழைத்து வரச் செய்து. அவருக்கு விடுதலையை அளித்தார். அதைக்கண்ட சிவபெருமான் மகிழ்ச்சியடைந்தவராகத் தம் குமாரனைக் கட்டித் தழுவி உச்சி முகர்ந்து அவனைத் தமது மடியில் உடகார வைத்து 'பிரும்மதேவனைச் சிறையில் அடைத் வைத்த காரணம் என்ன?'' என்று கேட்டார்.

- தொடரும்

உ

குருவே துணை

**சிரவணபுரம் கௌமார மடாலயம்**

**அருள் தரும் கருணாம்பிகை அம்மன் உடனாகிய**

**அருள்மிகு அவினாசியப்பர் திருக்கோயில்**

## மகா சிவராத்திரி விழா

**மன்னும் சிரவை வளரும்கௌ மாரமடம்**
**தன்னேர் கருணைப்பேர்த் தாயுடனே துன்னும்**
**அவிநாசி யப்பர்திரு ஆலயத்தில் வந்து**
**சிவராத்திரி காணல் சிறப்பு.**

அன்புடையீர்,

சிரவணபுரம், கௌமார மடாலயத்தில் திருவருட் பொலிவுடன் விளங்கும் அருள்மிகு கருணாம்பிகை அம்மன் உடனாகிய அருள்மிகு அவிநாசியப்பர் திருக்கோயிலில் நிகழும் சுபகிருது ஆண்டு மாசி மாதம் 6 ஆம் நாள் (18.02.2023) சனிக்கிழமை இரவு 8 மணி முதல் மாசி மாதம் 7 ஆம் நாள் (19.02.2023) ஞாயிற்றுக்கிழமை காலை 6 மணி வரை மகாசிவராத்திரி விழா நடைபெறும்.

சிவராத்திரியன்று உண்ணாது உறங்காது இருந்து நான்கு யாமங்களிலும் அபிஷேகம் செய்வதும், வில்வ அருச்சனை செய்வதும் மிகச்சிறந்த சிவபுண்ணியமாகும். 18.02.2023 ஆம் தேதி சனிக்கிழமை இரவு 9 மணி முதல் ஆண்கள் பெண்கள், சிறுவர் அனைவரும் அவிநாசியப்பருக்கு அவரவர்களே அபிஷேகம் செய்து வழிபாடு செய்யலாம். இரவு முழுவதும் திருமுறைப் பாராயணம் நடைபெறும்.

**மலர் மாலைக் கட்டளை : திரு. பழனிசாமிக் கவுண்டர்**
**சிலம்ப கவுண்டர் வலசு, காங்கேயம்**

**அருளிசை : ஸ்ரீ சந்தோஷி மாதா மியூசிக் அகாடமி.**

**: இருகூர் கலைக்குழு**

**சின்ன மேட்டுப்பாளையம்** ராமதாஸ் (எ) திருக்கச்சி நம்பி ராமானுஜதாசன் அவர்களும் ஸ்கந்தகுரு குழு அன்பர்கள் இணைந்து நடத்தும் நாம சங்கீர்த்தன நிகழ்ச்சி

இங்ஙனம்,

**தவத்திரு. குமரகுருபரசுவாமிகள்**, கௌமார மடாலயம், கோவை

தவத்திரு.கந்தசாமி பனுவல்திரட்டு

# தென்கயிலாயச் சத்திநாயக மாலை மூலமும் உரையும்

- சொல்லரசு. வீ. சிவஞானம், கோவை

சென்ற இதழின் தொடர்ச்சி:

**வேதம் எட்ட அரிதாய், நாவலூர்க்கோன் பா**
**விருப்பில்ஆரூர்த் தெரு உழன்ற,**
**பாத பங்கயம் என் சிரமிசைசூட்டிப்**
**பவம் இறப்பு ஒழிந்திடப்பாராய்**
**போதனோடுஅகிலாண்டத் திரள் யாவும்**
**பொன்றுறும் ஊழி காலத்தும்**
**வீதல் அற்று ஓங்கி விளங்கு தென்கயிலை**
**வித்தகா! சத்திநாயகனே! 29**

**அருஞ்சொற்பொருள்:**

நாவலூர்க்கோன் - சுந்தர மூர்த்தி நாயனார். பவம் - பிறப்பு. போதனோடு - பிரமனோடு. அகில அண்டத் திரள் எல்லா உலகங்களிலும் உள்ள உயிர்க்கூட்டங்கள். பொன்றுறும் - அழிந்து போகின்ற. வீதல் - அழிதல்.

**பொழிப்புரை:**

பிரமனோடு சேர்ந்து, எல்லா உலகங்களிலும் உள்ள உயிர்க்கூட்டங்கள் அனைத்தும் அழியும் ஊழிக்காலத்தும் அழிதல் இன்றி உயர்ந்து நிற்கும் தன்மை உடைய தென்கயிலை மலையாய் விளங்கும் வித்தகனே! சத்தியின் நாயகனே!

திருநாவலூர்த் தலைவனாகிய சுந்தரநாயனாருக்காக, திருவாரூர் வீதியில் மூர்த்தி நடந்து சென்றதும் வேதத்துக்கும் எட்டாத அருமை உடையதும் ஆகிய நினது திருவடியை தலைமேல் சூட்டி பிறப்பு இறப்பைப் போக்கிடப் பார்ப்பாயாக!

**புன் புழு விரும்பும் புள் எனத்துன்பப்**
**பொய் உடல் விழைந்து, அவத்து உழல்வேன்**
**இன்பு உருப்பொலி நின் திருவடித் தொண்டர்**

**எய்து அருள் ஏது கொண்டு அடைவேன்?**
**கொன்புவிபரித்தபணியினைவிரலில்க்**
**குலவு சிற்றாழியாப்புனைந்த**
**மின் புணர் கருணை வெற்ப! தென்கயிலை**
**வித்தகா! சத்திநாயகனே! 30**

**அருஞ்சொற்பொருள்:**

புன் - இழிந்த. புள் - பறவை. அவத்து - வீணாக. ஏது கொண்டு - எப்படி. கொன் - பெரிய. புவி - பூமி. பரித்த - தாங்குகின்ற. பணி - பாம்பாகிய ஆதிசேடன். சிற்றாழி - சிறிய மோதிரம், மின் - மின்னல் கொடி போன்ற உமை.

**பொழிப்புரை:**

பெரிய உலகைத் தாங்குகின்ற பாம்பாகிய ஆதிசேடனைவிரலில் விளங்கும் சிறிய மோதிரமாய் அணிந்து கொண்ட மின்னல் கொடி போன்ற உமாதேவியைப் பொருந்தும் கருணை மலையே! தென்கயிலை மலை விளங்கும் வித்தகனே! சத்தியின் நாயகனே.

இழிந்த புழுவை விரும்பும் பறவை போல துன்பத்தைத் தரும் பொய்யான உடலை விரும்பி வீணே உழல்கின்றேன்; இன்ப உருவாய் விளங்கும் நினது திருவடிக்குத் தொண்டு செய்யும் அன்பர்கள் அடையும் திருவருளை நான் எப்படி அடையப் போகிறேன்?.

**பழி பவம் விளையும் பூமி ஆம் மடவார்**
**பார்த்து உருகுற்ற என் மனம், நின்**
**செழியமென்மலர்ப் பொன் சேவடி நினைந்து அச்**
**செயல் பெறு தினம் எது? செப்பாய் -**
**இழிவு உறு சமய வாதிகள்தருக்கர்**
**இகல் உலோகாயதர்தாமும்**
**விழிகொடு காண விளங்கு தென்கயிலை**
**வித்தகா! சத்திநாயகனே! 31**

**அருஞ்சொற்பொருள்:**

பழிபவம் - பழிப்பிற்கு உரிய பிறப்பு. செழிய - வளப்பம் மிக்க. இகல் - போரிடுகின்ற. லோகாதயர் - இறை உயிர் தளை என்னும் முப்பொருள் உண்டு என்பதை ஏற்காது, உலக இன்பத்தையே பெரிதாக நினைக்கும் கொள்கை உடையவர்.

**பொழிப்புரை:**

தத்துவக் குறை உடைய சமயங்களைச் சார்ந்து இருப்போரும், தருக்கம் செய்பவர்களும், முரணுகின்ற உலகாயதரும் கண்கொண்டு காணும் ஆறு மலையாய் விளங்கும் தென் கயிலை வித்தகனே சக்தியின் நாயகனே.

பழிப்புக்குரிய பிறப்பு விளையும் நிலமாக விளங்கும் மகளிரைக் கண்டு உருகிய என் மனம் எனது வளப்பம் பொருந்திய தாமரை மலர் போன்ற அழகிய சிவந்த திருவடியை நினைத்து உருகும் நாள் என்னாள்? கூறுவாயாக

**நலம் கிளர்நீ என் உள் மலர் மணம் போல்**
**நண்ணவும் நாடிலேன்; வினையால்**
**மலங்கினேன் தேற அஞ்சல் என்று ஒரு சொல்**
**வழங்கி, ஆட்கொண்டிட மதியாய் -**
**தலம் கிளர்வான் சார்கோள் எலாம் முடியைத்**
**தாண்டிடாது அகன்று சூழ்தலினால்**
**விலங்கல் என்றிடும் பேர் ஏற்ற தென்கயிலை**
**வித்தகா! சத்தி நாயகனே! 32**

**அருஞ்சொற்பொருள்:**

நாடிலேன் - அடைய முயலவில்லை. தலம் கிளர் - இடம் அகன்ற. வான்சார் - ஆகாயத்தில் உள்ள . முடியை - சிகரத்தை. அகன்று - விலகி, சூழ்தலினால் - சுற்றுவதனால், விலங்கல் - மலை,விலக வைக்கும் ஒரு பொருள் (என இருபொருள் கொள்க)

**பொழிப்புரை:**

இடம் அகன்றதும், வானில் சஞ்சரிப்பதும் ஆகிய கோள்கள், (தென் கயிலை மலையின்) சிகரத்தை நேரே கடந்து செல்லாமல், விலகிச் சுற்றுவதால் விலங்கல் எனப் பெயர் பெற்றது. அந்தத் தென்கயிலை மலையாய் ! விளங்கும் வித்தகனே! சத்தியின் நாயகனே.

(உயிர்களுக்கு எப்பொழுதும்) நன்மையே செய்யும் நீவிர், எமது சிந்தையுள் மலரில் மணம் போல நுணுகி இருந்தும், அதனை இருவினைகளிகளின் வசப்பட்டு கலக்கம் அடைந்தேன்; அவற்றிலிருந்து அடியேன். விடுபடுமாறு அஞ்சாதே! என்று ஒரு சொல் சொல்லி அருளுவாயாக

- தொடரும்

# சுந்தரர் சொற்றமிழ்

## பெரியநாயக்கன்பாளையம் சித்திபுத்தி விநயாகர் பதிகம்

- தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள்

காப்பு வெண்பா

**601. சித்திபுத்தி யோடு திகழும் விநாயகனே!**
**நத்தி உனைத் துதிக்க நாடினேன் ; பத்திமலி**
**மெய்அடியார் போற்றும் வியன்சீர் அமைய, அருள்**
**செய்ய உளம் கொள்வாய் சிறந்து.**

நத்தி - விரும்பி. சீர் அமையும்படி அருள்செய்ய உளம் கொள்வாய் என்பது முடிவு.

**நூல் (கட்டளைக் கலிப்பா)**

**602. கோடி லங்கு மதகரி மாமுகம்**
**கொள்ளும் உன்னைக் குறித்துத் துதிசெய்வேன்**
**வாடி நொந்து மறுகல் அகன்றிட**
**வாழ்த்தும் என்முன் வருவதெந் நாள்கொலோ ?**
**பீடி யைந்திடும் மூடிக மேல்வரும்**
**பெருமை யாய்! அன்பர் பற்பலர் நாள்தொறும்**
**தேடி ஏத்தும் பெரியநாய்க் கப்பதிச்**
**சித்தி புத்தி விநாயகத் தெய்வமே !**

கோடு இலக்கு - தந்தம் விளங்குகின்ற. மதகரி - மதம்பொழியும் யானை. மறுகல் - கலங்குதல். பீடு இயந்திடும் - பெருமை பொருந்திய. மூடிகம் - பெருச்சாளி. சித்தி, புத்தி விநாயகக் கடவுளின் சக்திகள்

**603. பாசம் அங்குசம் பற்றிரு கைகளும்,**
**பற்றொ டிந்திடு கொம்புறு கையும், நல்வாச**
**மோதகம் கொள்க ரமும்கொடென் மனதில்**
**எண்ணிய வாறெதிர் வந்திடாய் ஈசனாகிய தந்தைதன்**
**தேரில்ஆர் இருசொ டித்தநின் சீர்எவண்**
**தேர்குவேன் ? தேசம் ஏத்தும் பெரியநாய்க் கப்பதிச்**
**சித்தி புத்தி விநாயகத் தெய்வமே !**

பற்று - பிடித்துக் கொண்டுள்ள (கை). வாச - நறுமணம் மிக்க. மோதகம் - கொழுக்கட்டை. கொடு - கொண்டு. என் எதிர் - நேரில். இருசு - தேரின் அச்சு. முப்புறம் எரிசெய்த அச்சிவன் உறைரதம் அச்சது பொடி செய்த வரலாறு வெளிப்படை. சீர் - சிறப்பு. எவண் - எப்படி

**604. கொய்ய ணித்திரு ஆத்தியும் கொன்றையும்**
**கூவி ளத்தொடு வன்னியும் கொண்டுனை**
**வைய மீதருச் சித்திடும் அன்பர்பால்**
**வைகும் ஆனை முகம் உறும் வானவா!**
**உய்ய வேண்டி அகவல்க் கவிசொலி**
**உன்னை ஏத்திடும் ஔளைவயக் கைலைசேர்**
**செய்ய னே!நற் பெரியநாய்க் கப்பதிச்**
**சித்திபுத்தி. விநாயகத் தெய்வமே!**

கொய் - மரத்திலிருந்து பறிக்கப்படுகின்ற. அணி - அழகிய. கூவிளம் - வில்வம். வன்னி - வன்னி இலை. வைய மீது - உலகில். வைகும் - தங்கியிருக்கும். அகவற்கவி - விநயாகர் அகவல் ஆகிய செய்யுள், இருபெயரொட்டு. விநாயகர் - ஔவையைத் தன் துதிக்கையால் தூக்கிக் கயிலையில் சேர்த்தது வெளிப்படை.

---

# சைவப் பெருங்கருணை சேக்கிழார்

- மகேஸ்வரி சற்குரு

சென்ற இதழின் தொடர்ச்சி:

முருகப்பெருமானின் திருவருளால் நாகனுக்கும் தந்தைக்கும் குழந்தை பிறந்தது தன் குழந்தையை எடுக்கின்ற போது திண்ணென்று மினுமினுப்பு கொண்டு குழந்தை இருப்பதைக் கண்ட நாகன் உரியபேரும் திண்ணன் என்று இயம்பு என்று சொல்கிறான். சேக்கிழாரின் எளிய அழகு இங்கு வியப்பைத் தருகிறது. மகளுக்குக் காரணப்பெயர் நாகன் வைத்தது மேற்கூறிய பாடல் அடிச் சொல்லுகிறது. ஆகல் பொருத்தமான ஓசை உரிய பேரும் திண்ணன் என்பதை நாதன் ஆணையிடுதல் போன்று சொல்லுவது சிறப்பு. திண்ணன் வளர்கின்ற தன்மை இளவரசனுக்கு உரிய உபசரிப்புகளுடன் இருப்பதாக சேக்கிழார் பாடுகிறார். வளர்ப்பு மிருகங்கள் முயல், செந்நாய், பன்றி, புலி இவற்றின் குட்டிகள் திண்ணனின் வளர்ப்புக் குட்டிகளாகும்

**மக்களின் தன்மை**

**கருமுயற் பறழினோடுங் கான வேனத்தின் குட்டி**
**கொடுவரிக் குருளை செந்நாய்க் கொடும் செவிச் சாபமான**
**முடுகிய விசையில் ஓடித் தொடர்ந்து உடன் பற்றி முற்றத்து**
**இடு மரத்தினிற் கட்டி வளர்ப்பான எண்ணிலாதன.(675)**

இக்குட்டிகள் ஓடுகின்ற வேகத்திற்கு சிறுவன் திண்ணனும் ஓடிச் சென்று பிடித்துக் கொண்டுவந்து மரத்தில் கட்டி வைப்பானாம். வீரத்தின் அடையாளமாக திண்ணன் வளர்வதை இந்த ஒரு பாடலில் முழுமையாகவே பாடுகின்றார் எனச் சொல்லலாம், ஆக இவ்வாறாக வளர்ந்து வந்த திண்ணன் தன் நண்பர்களுடன் விளையாடுவதுடன் வில்வித்தைப் பயிற்சியும் நாகனால் நல்ஆசிரியர் வைத்துக் கற்றுத்தர திண்ணன் வில்வித்தை வீரனாகிறான்.

தன் நண்பர்கள் உடன்வர வேட்டையாடுதலை விரும்பியே செய்து வருகின்றான் திண்ணன். நாய்களைத் துணைக்கு அழைத்துக் கொண்டு, இரவு நேரங்களில் காடுகளுக்கும் சென்று விதங்கள் பலவாக குரல் எழுப்பி, உறங்கும் விலங்குகளை

மெல்லவே எழுப்பி ஓடவிட்டு பின் அம்பெய்து தங்கள் உணவுக்காக உடைகளுக்கு தேவைப்படும் அளவும் ஆர்வத்துடன் வேட்டையாடுவதை, சேக்கிழார் தானும் ஒரு வேடனாக நிற்பது போன்ற பாவனையில் பாடியிருப்பது மகுடம். ஆயினும் வேட்டைக்கென்று சில வரைமுறை சட்டங்கள் வகுத்திருந்தனர். கொடிய விலங்குகளை வேட்டையாடுவர். யானைக்கன்றுகளை வேட்டையாட மாட்டார்கள். அழகாகத் துள்ளி குதிக்கும் குட்டி விலங்குகளைக் கொலை செய்யமாட்டார்கள்.

கருப்பம் தரித்து வரும் பெண் விலங்குகளுக்கும் துன்பம் செய்ய மாட்டார்கள். இது தமிழன் வைத்திருந்த வேட்டை அறம். ஆனால் நம் தேசத்துக்குள் வந்த ஐரோப்பிய தேசத்துக்குக் காரர்கள் காடுகளை அழிப்பதில் முனைப்புக் காட்டினர். கொன்று குவித்த காட்டு விலங்குகளும் ஏராளம். வேடர்கள் காட்டின் காவலாளிகள் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. வேட்டை அறத்தைப் பற்றிய சேக்கிழாரின் பாடல் பார்ப்போம்..

**துடியடியன மடிசெவியன துறுகயமுனி தொடரார்.**
**வெடிபட விரி சிறு குறுளையின் மிசைபடு கொலைவிரவார்**
**அடி தளர்வுறு கருயுடையன அணையுறு பிணை விலையார்**
**கொடியன எதிர் முடிகியும் உருகொலை புரிசிலை மறவோர்**
**(735)**

**ஆ**க வேட்டையாடுதல் தொழிலாக இருப்பினும், மூன்று உறுதி மொழிகளை வேட்டை அறமாகக் கொண்டுள்ளனர். ஒன்று, விநாயகப் பெருமானின் உருவாகிய யானைகளையும். யானைக் கன்றுகளையும் கொள்வது இல்லை. இரண்டு; கொடிய விலங்குகளைக் கொன்றாலும் அதன் குட்டிகளைக் கொல்வது கிடையாது. மூன்று கருவுற்ற கொடிய விலங்குகளைக் கொள்ளுதல் கிடையாது. சேக்கிழார் இப்பாடலைப் பாடியிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கது ஆகும். இத்தொழிலுக்கும் அறம் வேண்டும் என்பதை உணர்த்தும் அருமையான பாடல் அவர் தந்த பெட்டகம் நமக்கு. இனி திண்ணன் என்ன செய்கின்றான் எனப் பார்ப்போம்

- கருணை தொடரும்

# எங்கும் வெற்றி எதிலும் வெற்றி

- திரு. பச்சையப்ப தேவராசன்

மனம் தொடர்ச்சி

மகிழ்ச்சியின் திறவுகோல் அமைதி. அமைதியே உண்மையான மகிழ்ச்சி. வயது, கல்வி, பண்பாடு, செல்வம், அந்தஸ்து, அதிகாரம், பதவி, திறமை என்பனவற்றைப் பிறருடன் ஒப்பிட்டு மன அமைதியை இழக்கக்கூடாது.

எச்சூழலிலும் மன அமைதியுடனும் மன நிறைவுடனும் இருக்கப் பழக வேண்டும். எது நடந்தாலும் உற்சாகமுடன் இருக்க வேண்டும். அறவாழ்வு, நன்னடத்தை, புலனடக்கம், போதும் என்ற மனம் மிகத் தேவை. அளவுக்கு மீறி ஆசையை வளர்க்கக்கூடாது.

தோல்வியால் மனம் தளராமல் புதிய எழுச்சியுடன் செயல்பட முயற்சிக்க வேண்டும். விருப்பு வெறுப்பற்ற சமநிலை வாழ்வு வாழ்ந்திடப் பழக வேண்டும். வெளிச்சூழலை பிரச்சனையை சிக்கலை நாம் எப்படி அணுகுகிறோம், எப்படி ஏற்றுக் கொள்கிறோம், எப்படி எதிர்கொள்கிறோம்? எப்படிப் புரிந்து கொள்கிறோம் என்பது மன அமைதிக்கு மிக முக்கியம்.

சிறு துன்பம், எதிர் நிகழ்வு பற்றியும் துன்பப்படக் கூடாது அதனால் ஒன்றும் தலை போய் விடாது. பெருந்துன்பம் எதிர் நிகழ்வு பற்றியும் துன்பப்படக்கூடாது. அதனால் விளைவுகள் மாறப்போவதில்லை. மன அமைதியும், மன மகிழ்ச்சியும் கிட்டிட பெரியோர்களை மதித்து நடக்க வேண்டும். அவர்களுக்கு தக்க மரியாதை கொடுக்க வேண்டும். சமமானவர்களிடம் நட்பு கொள்க! தகுதிக்குக் குறைவானவரிடம் அன்பும் கருணையும் காட்ட வேண்டும்.

ஒத்துவராத தொல்லை தரும் தீய பண்புடைய மட்டமான மனிதரை விட்டு உடனே விலக வேண்டும். ஆசைகளைத் தூண்டும் புலன்களைக் கவர்ந்திடும் உணர்ச்சி வயப்படுத்தும் மனம் அலைபாயும் சூழலில் இருந்து விலகி தொலைவில் நிற்க வேண்டும். ஏமாற்றம், தோல்வி, வாதங்கள் தவறான எண்ணம் ஆகியவை மனச்சோர்வுக்கு காரணமானவை.மனச்சோர்வு மோசமான தொற்று வியாதி அதை அண்ட விடக்கூடாது. மனமே எல்லாவற்றுக்கும் காரணம் மனமே எல்லாவற்றையும் அனுபவிக்கிறது. மனதைப் புரிந்து கொண்டு பயிற்றுவிக்க வேண்டும். விழிப்புடன் கூடிய புத்தி

அதற்கு வழி காட்ட வேண்டும். தொடர்ந்து சரியான திசையைக் காட்ட வேண்டும். ஒழுக்கம், சமயக்கட்டுப்பாடு மனத்தை செலுத்துதல், மனத்தை ஒருமுகப்படுத்துதல், ஆழ்ந்த தியானம் ஆகியவை மனத்தை உயர் நிலைக்கு அழைத்துச் செல்லும்.

மகிழ்ச்சி, அமைதி, திருப்தி போன்றவை புறப்பொருட்களைத் துய்ப்பதால் கிடைப்பதாக மனம் தவறாகக் கற்பனை செய்கிறது. தவறான வழியில் செல்வதையும் செயல்படுவதையும் நாமே உணர முடியாதபடி மனம் நம்மைக் குழப்பி விடுகிறது. தீய குணங்களால் வரும் துன்பத்தை விட அறியாமையில் வரும் துன்பமே மிகுதி.

சுயநலம், தன்னலம் எப்போதும் எதையாவது எதிர்பார்த்துக் காத்துக் கிடக்கும். மனத்தை நல்வழிப்படுத்த பழக்கப்படுத்த வேண்டும். நம்பிக்கை, விசாரம், ஞானம், பக்தி சிரத்தை என்னும் நான்கு முறைகள் உள்ளன. சுற்றுச்சூழலுக்கு ஏற்ப மனசாட்சி மாறிவிடும் ஒவ்வொருவருக்கும் மனசாட்சி மாறுபடும். மனநிலையைப் பொறுத்தே வாழ்வும் முன்னேற்றமும் அமையும்.

எல்லா எண்ணங்களையும் சில நாட்களிலேயே அழித்து விட முடியாது. மன எண்ணங்களை அழிக்கும் முறைகள் பயிற்சிகள் யாவும் காலநீட்சியும் துன்பமும் தரக்கூடியவையாக உள்ளன.

கள், சாராயம், மது, இறைச்சி, வல்லுணவு, கீழ்த்தரமான பாடல், கீழ்த்தரக் காட்சிகள், சொற்கள், நட்பு ஆகியவை மனதின் சக்கரத்தை வேகமாகச் சுழற்றிவிடும். இம்மனவேகம் குறைய நல்ல பழக்கவழக்கங்கள், நல்ல சாத்வீக உணவு, ஆன்மீக நூல் படிப்பு, தனிமை, சபம், தவம், தியானம், பக்திப் பாடல், மன ஒருமை, விசாரணை போன்றவற்றைக் கடைப்பிடிக்கலாம்.

மனம் குணத்தைப் பற்றும்; சாட்சி மாத்திரையாய் நிற்கும்; கற்பனை செய்யும்; அறிவை உறுதி செய்யும்; உணர்ச்சிக்கு இடம் கொடுக்கும்; பகுத்தறியும்; கருத்துகளைச் சேர்க்கும்; உண்மையை மறைக்கும்; நினைக்கும்; மறக்கும்; ஊக்க எழுச்சி கொள்ளும்; சஞ் சலப்படும்; கவலைப்படும்; ஐயப்படும்; ஆசைப்படும்.

மனமே புருடன்; மனச்செயலே செயல், மனமில்லா நிலையே இன்பம்; மனமே அமைச்சன்; ஏவலன்; மனைவி; தந்தை; நண்பன்; அடக்கி வைக்கப்பட்ட மனம் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும். பின்னடைவு, தொடர்பு அறுப்பு, எதிர்வினை, பிறர் மேல் சுமத்தல், நொண்டிச்சாக்கு, உணர்ச்சி மேம்பாடு போன்றவற்றின் பின் ஒழிந்து கொள்ளும் நம்முடைய எல்லாச் செயல்களுக்கும் மூலகாரணம் மனம் தான்.

மனம் விரியும்...

# வண்ணச்சரபர் வகுத்துரைத்த அரசாட்சி

முனைவர் நெல்லை ந. சொக்கலிங்கம்

**முன்னுரை**

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆறு தெய்வங்களைப் பற்றிப் பல்லாயிரம் பாடல்கள் பாடி நெல்லையில் தமிழ் வளர்த்த இலக்கிய இமயம் (கி.பி.1839 - 1898) ஆவார், சமயநல்லிணக்கச் சிந்தனையும், சமுதாயப் பொதுநலனையும் ஒருங்கே இணைத்து எண்ணிய சமுதாயச் சிற்பி ஆவார், வள்ளுவ நெறியிலும் தமிழ் மரபு வழியில் இம்மியும் பிறழாத பெரும் புரட்சியாளர், அவர் படைத்த அரசாட்சி என்ற நூல் பற்றி இங்கே பார்ப்போம்,

**நூல் நுவலும் செய்தி**

சுவாமிகளின் அரசாட்சி என்ற நூல் 50 வெண்பாக்களை உடைய நூலாகும். முடியரசாட்சிக்காலத்தில் சுவாமிகள் வாழவில்லை தான். என்றாலும் நாட்டை ஆள்வோர் "குடித்தழீஇக் கோலோச்ச வேண்டும்" என்ற எண்ணத்தில் தோன்றிய நூலே அரசாட்சி என்ற நூல். இந்நூலை 1988ஆம் ஆண்டில் சரவணம்பட்டி, பெரிய தோட்டம் தருமணக்கவுண்டர் பொருளுதவி நல்க, இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. சிரவை ஆதினம் கௌமார மடலாய தவத்திரு. மருதாச்சல சுவாமிகளின் பொழிப்புரையும் அச்சிடப்பட்டுள்ளது. சோழவந்தான் கந்தசாமி சுவாமிகள் பதவுரை, கருத்துரை விசேட உரையைத் தழுவி இந்நூல் அமைந்துள்ளது. இந்நூலின் காப்புச் செய்யுள் வருமாறு.

**அரசாட்சி யாநிறைந்த வானவனைப் போற்றி**
**அரசாட்சி நூலொன்று அமைக்கும் அரசாட்சி**
**ஆகிக் கமலத்(து) அயனாம் அவரைஎல்லாம்**
**மேகிக்கச் செய்வாள் முகம்**

இங்கு முகம் என்பது இடத்தைச்சுட்டும். வண்ணச்சரபர் காப்புச்செய்யுள் தவிர 50 வெண்பாக்களைப் பாடி இந்நூலை நிறைய செய்துள்ளார்.

நாடாளும் மன்னவன் பிறவுயிர்களுக்குப் பாதுகாப்பாக இருந்து ஆட்சி செய்ய வேண்டும் கொலையிற்கொடியாரை வேந்தொறுத்தல் (குறள்) பற்றி வள்ளுவம் கூறும் அரசாட்சியைச் சுவாமிகள்

அழுத்தம் கொடுத்துப் பேசியுள்ளார். நீதிநெறி தவறாமல் ஆட்சி செய்யும் அரசன் சிறந்த அரசன். நீதிநெறி தவறி ஆட்சி முறை செய்யும் அரசன் ஐயறிவு விலங்கினமான பன்றியை விடவும் கீழ்ப்பட்டவனே ஆவான்

**“மேதினியார் சொல்மொழியில் மெய்அறிந்து பொய்யகற்றி நீதி**
**முறையில் நிறு(வ) அறியான் ஏதில்அர(சு)**
**இன்றிமுழு(து) ஆண்குறினும் எண்ணறிய பிறப்பில்**
**பன்றியிலும் தாழ்வாய்ப் படும் (அரசாட்சி,5)**

வண்ணச்சரபர் கூறும் அரசியல்நெறி வள்ளுவநெறியில் அமைவது ஆகும்,ஆம்!

**அறனிருக்கா அல்லவை நீக்கி மறனிழுக்கா**
**மானம் உடைய தரசு (குறள்:384)**

அரசன் தயரதன், வசிட்டன் போன்ற முனிவர்களின் எண்ணங்களைக் கேட்டு ஆட்சி புரிந்தது போல் ஆட்சி நடைபெறுமாயின் நிலமென்றும் தேவி கூட அஞ்சுவாளாம். இது வண்ணச்சரபரின் அரசாட்சிப்பாடல் (8)

**படை குடி கூழ் அமைச்சு நட்பரன் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு (குறள். 384)**

என்று உயர்த்திக் கூறும் குறள் வழியிலேயே அரசாட்சி அமைதல் வேண்டும் என்பது வண்ணச்சரபரின் அரசாட்சி வெண்பாக் கருத்தாகும்.

ததிசி முனிவர் கூறிய நல்லறக் கருத்துக்களை ஏற்காமல் சிவபெருமானின் அருளாற்றலை மதிக்காமல் யாகம் நடத்தினான் அதன் விளைவாக இரணியனும் அழிந்தான், அரசும் அழிந்தது. பத்துத்தலையுடைய இராவணன் சிவனை வணங்கி வழிபடும் சிந்தையுடையவன்; சிறந்த வீரன்தான்; ஆனால் காமவேட்கைக்கு அடிமையாகி தன் வீரத்தையும் தம்பிமார்களையும் இழந்து இறந்து போனான். இப்படிப்பட்ட புராணங்களில் சொல்லப்பட்ட அசுரர் தலைவர்கள் அழிந்து போன காரணங்களைக் கூறி மன்னர்கள், ஆன்றோர்கள், அமைச்சர்கள் கூறும் அற வழிகளைக் கேட்டு ஆட்சி செய்தல் வேண்டும் என்பதை வெண்பாக்கள் வழி வலியுறுத்திப் போகின்றார் வண்ணச்சரபர்.

நாட்டை ஆளும் மன்னன் நல்லவனாகவும், அறிவுத்திறம் உள்ளவனாகவும், ஒழுக்கநெறி பற்றி பொய்மைகளை விலக்கி உண்மைகளை ஏற்று அரசாட்சி புரிதல் வேண்டும் அவ்வாறு

ஆளும் அரசன் ஆட்சியில் வானம் மழை பொழியும்; பயிர்கள் செழித்து வளரும், ஆகவே தண்டபாணிசுவாமிகள்,

**தானம் தவம் இரண்டும் தங்கா வியனுலகம்**
**வானம் வழங்கா தெனின் (குறள் 19)**

என்னும் வள்ளுவம் இங்கே ஒப்பு நோக்குதற்குரியது. இவற்றை எல்லாம் எண்ணிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்,

**மெய்யே பெருகி விளங்கற்கும், மேதினியில்**
**பொய்யே மிகவும் பொலிதற்கும் மை, ஏழும்**
**சீர்அறிந்து, பொய்தற்கும் செய்தபயிர் தீய்தற்கும்**
**காரணம், செங் கோல், வெங்கோல் காண் (அரசாட்சி, (34)**

என்று மன்னன் செங்கோல் திறத்தின் விளைவை முத்தாய்ப்பாகக் கூறி அரசாட்சியின் நுட்பத்தை விரித்துரைத்துள்ளார்

- தொடரும்

# 76 ஆம் ஆண்டு சுதந்திர தின விழாவை ஒட்டிய சிறப்புக் கருத்தரங்கு

- கி.சுப்பிரமணியன் ( ஐ.கே.எஸ்)

## நாட்டுப்புறப் பாடல்களிலும் சிற்றிலக்கியங்களிலும் காணப்படும் விடுதலை உணர்வு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பாடல்களில் விடுதலை உணர்வு

சென்ற இதழின் தொடர்ச்சி:

“எண்ணற்ற வரிகளின் சுமை, ஊருக்கு ஒரு வரி,குலத்துக்கு ஒரு வரி என்ற முறைகேடான, சிக்கலான சட்டங்களால் மக்கள் துன்பப்பட்டார்கள்”.

சரபர் கீர்த்தனையில் இதைப் பற்றி குறித்துள்ளார். சப்பாத்திக்கள்ளி முளைத்திருக்கும் வறண்ட காட்டுக்கும், எதுவுமே முளைக்காத தரிசு நிலங்களுக்கும் அதிக வரிகள் விதித்தனர். இதற்கு ஆங்கில அரசும் உடந்தை, ஒரு போராட்டத்துக்குப் பிறகு இவை சீராக்கப்பட்டன.

துணி துவைக்கும் தொழிலாளி பயன்படுத்தும் கல்; முகம் மழிக்கும் தொழிலாளியின் கத்தி; குடம் வனையும் கலைஞரின் சக்கரம் சுற்றும் கோள்; உழவனின் கலப்பை... இப்படி சிறியதிலிருந்து பெரியது வரை எல்லா தொழில்களும் நசிந்து போகும் அளவு வரிகள் விதிக்கப்பட்டன. வரி கட்ட முடியாதவர்கள் சித்திரவதைக்கு உள்ளானார்கள்.தொழுவக் கட்டையில் மாட்டித் தொங்க விட்டார்கள். தலையையும் கைகளையும் மட்டும் ஒரு பலகையில் நுழைத்து கை, கால்களை கட்டி முதுகில் பாறாங்கல் ஏற்றி பல மணி நேரம் வெயிலில் நிறுத்தப்பட்டனர். கசையடிகளும் தரப்பட்டன. சரபர் வாழ்ந்த (1854) காலத்தில் இது பரவலாக இருந்திருக்கிறது.

சரபர் தாம் சென்ற இடங்களில் இவற்றை கண்டிருக்கக்கூடும். வெள்ளையனுக்கு அடங்கி வாழ்ந்த சில சமூக கெடுமதியாளர்கள் கள்ளும், சாராயம் விற்று செல்வராயினர். இவர்களை எதிர்த்துப் பயிர்த்தொழில் செய்தோர் வழக்கு தொடுத்தால் பாவி வக்கீல்கள் ஏமாற்றுவதும் சரபர் மனதை நோகச்செய்துள்ளன.

சமூக கேடுகளைப் பார்த்து புழுங்கிய சரபர், இங்கிலீசுக்காரன்

அநியாயக் கொடுமையை என்னென்று சொல்வேன் அம்மா என்று உருக்கமாகப் பாடுகிறார். சரபர் கண்ட சமுதாய நிலை இத்தகையது

**மொழி**

மொழி மக்களின் விழி போன்றது. விழி இல்லையேல் பார்வையில்லை. அதுபோல மொழியில்லையேல் வாழ்வில்லை. மொழி வழிபட்ட சிந்தனை மாந்தர் இனத்தை உயர்த்துகிறது என்று தெ.முருகசாமி கூறுவது எண்ணத்தக்கது. இதை நன்கு புரிந்து கொண்ட ஆங்கிலேயர் உள்நாட்டுத் தாய் மொழிகளை அழிக்க பல திட்டங்களை வகுத்தனர். ஓரளவு வசதியும், செல்வமும் கொண்டவர்கள் ஆங்கிலம் கற்று ஆங்கில அரசில் அலுவலர்களாக இருந்து தமிழுக்குச் செய்த கேடுகள் பல. மொழிவழிச் சிந்தனை விழிப்பு அடையாத காலத்தில் தமிழ் மொழிப்பற்றின் வேரையும், விழுதுகளையும் பல ஆயிரம் பாடல்களில் பாடிப் பதிவு செய்தவர் வண்ணச்சரபர்.

தமிழுக்கு உயர்மொழி இல்லை; தமிழ் சுவை அறியாத தெய்வம் இல்லை என்றெல்லாம் பாடி மகிழ்ந்த அவர் ஆங்கில ஆட்சியில்

**“கன்னி நன்நாட்டில் பிறந்தாரும்**
**ஈனக் கலை பயில**
**இன்னிசைச் செந்தமிழ் பாவாணர்**
**வாடுறும் இக்கொடுமை”**

என்று தமிழை, தமிழ் படித்தவரைப் புறந்தள்ளும் காலச்சூழலை எண்ணி வருந்தினார். தமிழ்நாட்டில் பிறந்தவர் பலரும் ஆங்கிலம் பயிலத் தொடங்கிய அவலம் அன்றே தொடங்கி விட்டது. அதை மாற்றும் முயற்சியாக, தமிழின் பெருமையைப் புலப்படுத்தி ஐம்பதாயிரம் பாடல்கள், 274 நூல்கள், பல வகை யாப்பு, அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம், வண்ணத்தியல்பு என்பன போலப் புதுமைகள் செய்தார்.

‘தமிழலங்காரம்’; அற்புதமான நூல் புலவர் புராணம் வரலாற்றுப் பதிவு எனப் பன்முகம் கொண்ட சரபர். அதற்காகப் பிற மொழிகளைக் குறிப்பாக சமஸ்கிருதத்தை வெறுக்கவில்லை. தமிழே உயர்ந்தது எனப் பெருமாளே சீட்டு கொடுத்தாலும் தமிழுக்குச் சமமாக வடமொழியையும் ஏற்றுக்கொண்டார். அவர் தமிழ்ப் பணிகளைத் தனியே ஆய்வு செய்ய பல்கலைக்கழகங்களில்

தனி இருக்கையே அமைக்கலாம். அந்த தமிழின் ஆற்றலை ஆங்கிலியர் அந்தாதி பாடி மெய்ப்பித்தார்.

தமிழர்களை அடிமைப்படுத்திய ஆங்கில அரசின் கொடுமையை விட, ஆங்கில மொழிக்குத் தமிழன் அடிமையானது இன்னும் கொடிது. இன்று வரை அது தீரவில்லை. மொழி அழிந்தால் ஒரு நாட்டின் பண்பாடும் நாகரிகமும் அழியும் இருபதாம் நூற்றாண்டில் தமிழர்களே அதைச் செய்து வருவது இன்னும் ஒரு கொடுமை.

**சமயப் பணி**

19 ஆம் நூற்றாண்டில் எழுந்த ஆங்கில அரசு எதிர்ப்புக்கு இன்னொரு காரணம், நாடு முழுதும் எழுந்த சமய மறுமலர்ச்சி. ஆங்கில அரசும் கிறித்தவப் பாதிரிமார்களும் செய்த மதமாற்றப் பணிகள், பஞ்சம் பட்டினியால் வாடிய ஏழைகள் பலரை மதம் மாறச் செய்தன. இந்த நேரத்தில் சமயங்களில் ஒற்றுமையை வலியுறுத்தி பிளவுபட்ட மக்களை இணைக்க முயன்றவர்களில் வள்ளலாருக்கு அடுத்து வண்ணச்சரபர் வருகிறார். அருட்பெருஞ்ஜோதி வழிபாடு போலவே அறுசமயவழிபாடும் இருந்தது.

**“எத்தலமும் எத்தேவும் ஏகம் எனத் தேர்ந்த பின்னும்**
**இத்தலமேல் அத்தலம் மேல் என்றிடேன்”**

எனப் பாடி மகிழ்ந்தார். ஒரு சமயத்தில் நின்று, சாதியில் வேறுபட்டவர்களையும், ஒரு சாதியில் பிறந்தும் சமயத்தில் வேறுபட்டவர்களையும் நாட்டுணர்வு மொழியுணர்வில் வேறுபடுத்திய பெருமை சரபருக்கு உண்டு.

**“பரசமயங்களிலும் பரவும் பொற்புமிகு**
**வட்டமான புண்ணிய பொருளே”**

என்று அவர் பாடுவதன் மேன்மை புரிகிறது. சமூக அறமாக இது மலர்ந்தால் நற்பயன் விளையும்.

சரபர் மூன்று இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களுடன் தொடர்பு கொண்டிருந்தார். சையத்மொய்தீன் முதலாம் கவிஞர். தமிழ்க் கவிதை பல பாடிய அவர் இறுதியில் சிவகாட்சி பெற்றார்.

இரண்டாம் புலவர் சீறாப்புராணம் பாடிய உமறுப் புலவர். இவரைச் சரபர் சதுர்வேத சித்தாந்தி என்று போற்றுகின்றார். கம்பராமாயணத்தைப் படித்து அதன் அடிப்படையில் சீறாப்புராணம் பாடினார்.

- தொடரும்

# பக்த மான்மியம் ஐம்பத்தைந்தாவது பிம்பாசி பத்தர் கதி

திரு. வே. சத்திய நாராயணன்

## குருவின் மறைமொழி

உடனே பிம்பாசி தன்னுடைய ராச அடையாளங்களைக் களைந்து நீக்கி மேலாடையை இடையில் இறுக்கி குருநாதரைக் காணச் சென்றான். அப்போது அங்கிருந்த தொண்டரில் ஒருவர் அச்சமின்றி இக்கிணற்றில் குதிக்குமாறு கட்டளையிட, அரசனும் மன உறுதியுடையவனாய் கிணற்றில் பாயப்புகுந்தான்.

அடியவர்கள் அரசனை தடுத்தனர். சீடர்கள் இந்த அரசன் மிக்க பரி பக்குவம் உடையவன் என்று உவந்து கூறியபடி குருநாதரிடம் அழைத்துச் சென்றனர். பிம்பாசி சற்குருநாதர் இராமானந்தர் திருப்பாதத்தைப் பணிந்து போற்றினான்.

'என்னுடைய பாவ வினைகளைப் போற்றி ஆண்டு அருளவேண்டும் என்று இரந்து வேண்டினான். அரசனின் பணிவும் பக்தியும் கண்ட குருநாதர் அவனுடைய செவியில் சீராம மந்திரத்தை அவனுடைய வலச்செவியில் உபதேசித்தார்.

## பிம்பாசியின் வேண்டுகோள்

பக்தியில் மனம் ஒன்றுபட்ட பிம்பாசியின் அன்பை உணர்ந்த குருநாதர் அவனிடம், நீ உன் நகர்க்குச் சென்று அருள் வடிவான கண்ணபெருமானின் திருவடிகளைக் நாளும் நினைத்து பாகவதர் பூசனை செய்து வாழ்வாய் என்றுரைத்தார்.

அதுகேட்ட மன்னன் பிம்பாசி, குருநாதர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தனக்கு ஒருவரம் தருமாறு வேண்டினான். அவன் குருவிடம், தேவரீர்வசம் என் உடல், பொருள் உயிர் எல்லாம் முழுமையாக ஒப்படைத்தேன். அதனால் என்னைக் காப்பதும் தூயவரான உம் கடமை என்று கருதிப் பணிகின்றேன். அவ்வாறே தாங்களும் என்னை ஆட்கொண்டு எனது எண்ணம் நிறைவேற அருள் செய்க என்று யாசித்தான்.

குருவும் அருளொடு அதற்கு உடன்பட்டார். மன்னன் பரவசங்கொண்டு அடியவர்கள் யாவருக்கும் பெருந்தொண்டு புரிந்து மகிழ்ந்தான்.

**காசிக்குச் செல்லல்**

பிம்பாசி தன்னுடைய ஆட்சியைத் தன் மகனுக்கு அளித்தபின் பாகவதர்களுடன் சேர்ந்து வாழ்வது கண்ட மக்கள் அரசனுக்கு பைத்தியம் பிடித்து விட்டது என்று கூறினர். குருநாதராகிய இராமானந்தர் மூன்று நாட்கள் கடந்தபின் காசிக்குச் செல்லக் கருதினார். குறையாத பேரன்புடைய அரசனும் எண்ணற்ற பொன்னைத் தட்சிணையாக அளித்துப் போற்றியவனாய், அருளமுதமாகிய கடலில் பெருகும் அலைகளை ஒத்த தங்களிடம் நல்லுரைகளைக் கேட்க விரும்புகின்றேன். எனவே நானும் தங்கள் திருத்தொண்டர்களுடன் ஒருவனாக வருவதற்கு அனுமதி வழங்க வேண்டுகின்றேன்; இதன்பொருட்டு எனது அரசாங்கப் பொறுப்பையும் மகனிடம் ஒப்படைத்து விட்டேன் என்று பணிந்தான். மன்னவன் மனநிலை கண்ட குருவும் தன்னுடன் வர இசைவு தெரிவித்தார். மன்னவனும் தம் பற்றினை விட்டுக் குருவுடன் புறப்பட்டான். அரசன் பிம்பாசி குருநாதருடன் செல்வதைக் கண்ட அவனுடைய மனைவியர் பன்னிருவரும் அவனைப் பின் தொடர்ந்தனர்.

அரசனும் குருவும் அவர்களுக்கு அறிவுரை கூறி அந்தப்புரத்திற்குச் செல்லுமாறு அறிவுறுத்தினர். சீதை என்ற பெயருடைய ஒருத்தி மட்டும் திரும்பிச் செல்லாது அரசன் தன்னை விட்டுச்சென்றால் தன் உடலிலிருந்து உயிர் நீங்கும் என்று உறுதிபடக் கூறினாள். அதனைக் கேட்ட குருவும் அரசனிடம் அந்தப்பெண்ணை மகள்போலக் கருதி உடன் அழைத்து வரலாம் என்று அறிவுறுத்தவே மன்னவனும் அதற்கு இசைந்து அவளுடன் குருவைத் தொடர்ந்தான். ஒன்றுபட்ட மன உறுதியுடன் பல்வேறு தர்மங்களைச் செய்து குருநாதருடன் காசிநகருக்குச் சென்றான். பின்னர் பிம்பாசி மன்னன் கண்ணபெருமானின் அருளைப் பெற எண்ணிப் பாகவதக் கூட்டத்தாருடன் துவாரகைக்குச் சென்றான்.

- தொடரும்

# வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் வரலாறு
# செட்டிநாட்டில் நிகழ்ந்த செயல்கள்

தனவணிகச்சீலர் செறிந்து வாழும் தேவ கோட்டை சென்றபோது, வேதாந்தம், கறுப்பன் செட்டியார் என்பவரது, தனித்தவச் சாலையில் தண்டபாணி சுவாமிகள் தங்கினர். உரிமையுடன் பழகிய அவர், இவரது உயரிய பண்புகளைப் பலரிடமும் எடுத்துக் கூறினர். அந்நகரில், மேலவீடு சிதம்பரம் செட்டியார் என்பவர், அன்புடன் வணங்கி, தமக்கு மகப்பேறு இல்லாத குறையைத் தீர்க்கும்படி வேண்டினர்.

அதற்கு சுவாமிகள் எனக்கு இப்போதுள்ள பொருட்கடன் தீரப்புரிந்தால், முருகன் உமதுமனையவள் வயிற்றில் ஆண் மகவு உதிக்கச் செய்வான் என்று கூறித் திருநீறு வழங்கினர். உடனே ஆயிரம் ரூபாய் திருநெல்வேலிக்கு அனுப்பிக் கடனை நிவிர்த்தி செய்தார்.

தாம் கூறிய சொல் தவறாமல் பலிதமாகும்படி வேண்டி தேவகோட்டை நகரத்துச் சிவன் கோவிலில் விளங்கும் தண்டபாணிக்கடவுளுக்கு அரிய ஒரு பிள்ளைத் தமிழ் திரிவந்தாதி, திருப்புகழ் முப்பத்தாறு கொண்டதான ஒரு நூல் பதிகம் ஆகியன பாடினர்.

சில நாள் கடந்து ஆண்மகப் பேறு எய்தி மகிழ்வுற்றனர் செட்டியார். வன்றொண்டஞ்செட்டியார், ‘‘காற்றே பஞ்சாயிருக்குங் காண்’’. என்ற வெண்பா ஈற்றடி கூறினர். மேலே மூன்று வரிகளை அதன் கருத்து விளங்க சுவாமிகள் கூறினர்.

**‘ கடுஒழுகும் வாய்க்கினிய காசினியிற் றோ்ந்து**
**கொடுபருக்க ஒட்டாது கொண்டு நெடுநாளா**
**மாற்றே(வு) உறங்குகின்ற மாசுணத்தோல் மெத்தைக்கு’’**
**காற்றேபஞ்சாயிருக்கும் காண் என்பது அக்கவி.**

**குருவே சரணம்**

# அன்னையர் அருட்பதிகம்
# பாடல் 11

**பண் இசைக் கொங்கு நாட்டிடை உயிர்கள்**
**பண்ணிய புண்ணியப் படிவாய்**
**விண் இசை சுரரும் ஏத்து அணிப் பேரூர்**
**வேண்டு அகிலாண்ட நாயகியை**
**நண் இசைச் சிரவை பொலி கவுமாரர்**
**நாடு இராமானந்தர் குருதாள்**
**எண் இசைக் கந்தசாமி ஏத்திடு பா**
**இசைப்பவர்க்கு உறும் சுக இனமே**

**அருஞ்சொற்பொருள்:**

பண் - புகழ்; பண்ணிய - செய்த ; இசை - கூடுதல், புகழ், பொருந்து ; சுரரும் - தேவர்களும்; நண்ணல் - கிடைத்தற்கு அரிய; நாடு - விரும்பு; ஏத்து - போற்று; எண் - அறிவு; உறு - உண்டாகும்.

**இதன்பொருள்:**

செய்த நற்பலன் பொருந்திய படியால் புகழ் மிக்க கொங்கு நாட்டில் வாழும் உயிர்களும், விண்ணில் கூடிய தேவர்களும் புகழ்ந்து வேண்டும் அழகுமிகு பேரூரில் விரும்பி அருளபாலிக்கும் அகிலமுழுதும் ஆளும்நாயகி. அவளை கிடைத்தற்கரிய புகழ்மிகு சிரவைத் திருநகரில் சிறந்த முருகனை முழுமுதலாகப் போற்றும் பக்கதர்கள் விரும்பும் இராமானந்த சாமிகளின் திருத்தாளினை அறிவு பொருந்திய கந்தசாமி சுவாமிகள் புகழ்ந்து பாடிய பாக்களைப் பாடுகின்றவர்களுக்கு இன்பம் உண்டாகும்

**நமது கௌமார அமுதம் திங்கள் இதழுக்கு மகான் வண்ணச்சரபரது பாக்களை ஆய்வு செய்து கட்டுரை எழுதிவரும் திரு. நெல்லை ந. சொக்கலிங்கம் அவர்கள் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களிடம் 21.12.2022 அன்று தமிழ்ச்செம்மல் விருது பெற்றமைக்கு வாழ்த்துகிறோம்**

**- திருப்பெருந்திரு. இராமனந்த குமரகுருபர சுவாமிகள்**

# குருபர தத்துவ நூல்
# பாறைக் கிணற்றுச் சருக்கம்

கா.உமாபதி உதவி நூலகர்

மகான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தன்வரலாற்றைக் குருபர தத்துவ நூல் என்று எழுதி உள்ளார் அதில் தன் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்வுகளை 30 சருக்கங்களாக வடித்துள்ளார். அவற்றுள் பத்தொன்பதாவது சருக்கம் பாறைக்கிணற்றுச் சருக்கம். அதற்கு உரைதனைக்காண அடியேனுக்கு அனுமதி வழங்கிய குரு மகாசந்நிதானங்களின் பொன்னார் திருவடிகளைப் போற்றுகின்றேன்.

உலகில் ஆயிரக்கணக்கான திருமடங்களும் திருக்கோயில்கள் இருந்தாலும் தன் பெயரால் திருநெல்வேலியில் மடாலயமும் நந்தவனம் ஒன்றும் உண்டாக்கிட மகான் தண்டபாணி சுவாமிகள் விழைந்தார்.இதற்காக எனைத்தும் ஓர் பொருட்பேறின்றி என்செய்கேன் என்று நைந்தார். இலங்கை முதலிய நாடுகள் எல்லாம்சென்று பொருள் தேடிவந்தார்.

திருமடம் கட்டிடத் துவங்கி அந்த வேலையும் முடிந்து புதுமனை புகுவிழா நடத்துவதற்கு முன் ஒரு கிணறு தோண்ட நினைக்கிறார்.அதனால் சுவாமி அவர்கள் பட்ட சிரமங்களையும் அனுபவங்களையும் பாறைக்கிணற்றுச்சருக்கத்தில் பலவாறாகப் பகன்றுள்ளார். அதனைப் பற்றித் தொடர்ச்சியாகக் காண்போம்.

**19. பாறைக்கிணற்றுச் சருக்கம் பாடல் 1**

**திருமடங்கட் டிடத்துவக்கி , அந்த வேலை**
**தீர்ந்து குடி புகுவ தன் முன் , தேவர்க் காகும்**
**மருமலர்நந் தனவனஞ் செய் திடற்கோர் கூபம்**
**வகுக்குமிச்சை யென்மனத்தில் வந்த(து) அந்தோ**
**ஒருவருடத்(து) ஒன்பதுமா தமுப் நற் றண்ணீர்**
**ஒழுகுமிட மாயினும்மற் றுளசின் னாளில்**
**அருமையவாம் பூஞ்செடிகள் உலர்ந்து போதல்**
**ஆகாதே , அருந்துநர்க்கும் ஆமே யென்று.**

**அருஞ்சொற்பொருள்:** கூபம் - கிணறு

நன்னாளில் திருமடம் கட்டிடத்தொடங்கி அதுவும் சிறப்புற நடந்தேறியது. அதில் குடிபுகுவதற்கு முன் மடத்தைச்சுற்றித் தெய்வங்களுக்குச் சிறப்பொடு பூசனை செய்வதற்கு ஏற்ற மணமிகு மலர்களைத்தரும் நந்தவனம் அமைத்திட நினைந்து, ஒருகிணறு தோண்ட வேண்டும் என்ற எண்ணம் என் மனதில் தோன்றியது. ஓராண்டும் ஒன்பது மாதம் ஆகியும் தண்ணீர் ஊற்றைக்காண முடியவில்லை. இன்னும் சிலநாட்டகள் கழிந்தால் அரியவகைப் பூச்செடிகள் வாடிப்போவதோடு அன்பர்களுக்கும் குடிக்க நீரின்றிப் போகுமே என்று நினைத்தேன்

**பாடல்2**

**திருவுளச்சீட்டு செப்பியபடிச் செய்தல்**

**வர்தசங்கற் பப்படியென் மனத்திற் றோன்றும்**
**வயின் செயவோ, அல்லதந்த வகைநூல் கற்ற**
**மைந்தர் சொல்லும் அவ்விடத்திற் செய்வோ, என்ன**
**வரைந்திரண்டு சீட்டும் எழில் மயில்மீ தேறும்**
**கந்தனது சந்நிதியில் இட்(டு) அங் குற்ற**
**கான்முளையால் ஒன்றெடுத்துக் கண்ணுற்றேன்,அ.்.து**
**இந்தவுல கத்தெவரும் ஒப்புமா(று) அவ்**
**இயல்புணார்தோர் மொழிவழிசெய் எனச்சொல்லிற்றே**

அதனால் நான் மனத்தால் நினைத்த இடத்தில் கிணற்றை அமைப்பதா, அல்லது அந்த வகையான நூல்கற்ற நீரோட்டம் வல்லுனர்கள் சொல்லும் இடத்தில் அமைப்பதா என்று இரண்டு சீட்டுகளை எழுதி அழகு மயில் ஏறிவரும் கந்தன் காலடியில் வைத்து அங்கு வந்த ஒரு சிறுபெண்ணை விட்டு எடுக்கச்செய்து பார்த்தேன். இதில் இந்த உலகில் எல்லோரும் ஏற்றுக் கொள்ளுமாறு நீரோட்டம் வல்லுனர்களைக் கொண்டே செய் என்றிருந்தது.

- தொடரும்

# நூல் மதிப்புரை

நூல்: திருக்குறள் சிந்தனைகள் 2013
பதிப்பாசிரியர்: சிரவை ஆதீனக் கவிஞர் ப.வெ.நாகராசன்.

திருக்குறள் பதிப்பின் 200 ஆம் ஆண்டு ஆய்வுத் தேசியக் கருத்தரங்கத்தின் நினைவாகப் மூதறிஞர்களின் திருக்குறள் பற்றிய சிந்தனைகளை ஒரு மாலையாகக் கோத்துத் திருவள்ளுவருக்கு அணிவிக்க இந்நூல் உருவாகப்பட்டது.

அதன்படி ஒன்பது ஆய்வுக் கட்டுரைகள் இந்நூலில் தரப்பட்டுள்ளது.. மிக மூத்த பேராசிரியர் ஆகிய முனைவர் இராம . இருசுப்பிள்ளை அவர்களின் திருக்குறள் பாயிரம் பற்றிய கட்டுரை , பேராசிரியர் முனைவர் கு.வெ.பா. அவர்களின் பௌத்தம் தொடர்பான கட்டுரை , மேனாள் துணை வேந்தர் . பேரா.முனைவர் சு.சுந்தரமூர்த்தி அவர்களின் நுண்பொருள்மாலை அறிமுகக்கட்டுரை , திருக்குறள் புனிதர் பேரா . முனைவர் கு .மோகனராசு அவர்களின் காலவரிசையில் திருக்குறள் மூலம் மற்றும் உரை பற்றிய அரிய பட்டியல் , முனைவர் ஐ.கே.எஸ் . அவர்களின் சொல்லேருழவன் என்ற கட்டுரை ஆகியன இந்தத் தொகுப்புக்குப் பெருமை தருவன ஆகும் . தவத்திரு . சிரவையாதீனம் குருமகாசந்நிதானங்கள் அவர்கள் , முனைவர் . வே.இர. மாதவன் அவர்கள் , திரு . ப.வெ.நா அவர்கள் திருவள்ளுவரைப் பிற அருளாளர்களுடன் ஒப்பிட்டு நோக்கியுள்ளனர் . பங்களூரு பேரா.அர. வெங்கடாசலம் அவர்களின் பார்வை உளவியல் சார்ந்ததகாக அமைந்துள்ளது .

அனைத்துக் கட்டுரைகளும் தத்தம் நோக்கில் சிறப்பு வாய்ந்தவையாக விளங்குகின்றன. திருக்குறள் சார்ந்து முனைவர் பட்டம் மேற்கொள்வோர்க்கு இந்நூல் சிறந்த கையேடாக விளங்கும்.

திருக்குறள் பதிப்பின் 200 ஆம் ஆண்டு ஆய்வுத் தேசியக் கருத்தரங்கத்தின் நினைவு வெளியீடாக 27.04.2013 அன்று வெளி யிடப்பட்டது.

சிரவை கௌமார சபை வெளியீட்டு எண்:329

# தவத்திரு இராமானந்த அடிகளார் உயர்நிலைப்பள்ளி

## விளையாட்டு விழா

சின்னவேடம்பட்டி தவத்திரு இராமானந்த அடிகளார் உயர்நிலைப்பள்ளியின் விளையாட்டு விழா 1201 2023 வியாழக்கிழமையன்று சிறப்பாக நடைபெற்றது. காலை 9 மணி அளவில்விழா தொடங்கியது. பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி ப.பொன்னம்மாள் அவர்கள் பள்ளியின் சிறப்புகளை எடுத்துக்கூறி வரவேற்புரை நல்கினார்.

சரவணம்பட்டி 3 காவல் நிலைய ஆய்வாளர் திரு.ஜெ.சரவணன் அவர்கள் தேசியக் கொடியினை ஏற்றி மாணவர்களின் அணிவகுப்பு மரியாதையினை ஏற்றுக் கொண்டார்.

விழாவிற்கு பள்ளியின் முன்னாள் மாணவர் திருப்பூர் திரு.மதியழகன் அவர்கள் ஒலிம்பிக் ஜோதியினை ஏற்றி விளையாட்டு விழாவினை தொடங்கி வைத்தார். சிரவையாதீனம் குருமகாசந்நிதானங்கள் அவர்கள் ஆசியுரை அருளினார்கள்.

பள்ளி மாணாக்கர்களுக்கு ஓட்டம், குண்டு எறிதல், ஈட்டி எறிதல், நீளம் தாண்டுதல், கபடி, எறிபந்து, கைப்பந்து என பல்வேறு விளையாட்டுப் போட்டிகள் நடத்தப்பட்டு வெற்றி பெற்றவர்களுக்குப் பதக்கங்களும் சான்றிதழ்களும் விழா மேடையில் வழங்கப்பட்டன.

மாணவ மாணவியர்களின் விளையாட்டுத் திறனை மேம்படுத்தும் வகையில் மடாலயத்தின் சார்பாக நடத்தப்பட்ட இந்த விளையாட்டு விழாவிற்கான ஏற்பாடுகளை உடற்கல்வி ஆசிரியர் திரு பெ.மணிவண்ணன் மிகச் சிறப்பாகச் செய்திருந்தார். மாணவர்கள் தங்கள் திறன்களை வெளிக்காட்டி நூற்றுக்கணக்கான பதக்கங்களையும் சான்றிதழ்களையும் வென்றனர்.

## இலக்கியமன்ற நிறைவு விழா

சின்னவேடம்பட்டி தவத்திரு இராமானந்த அடிகளார் உயர்நிலைப்பள்ளி தவத்திரு கந்தசாமிசுவாமிகள் இலக்கிய மன்ற நிறைவு விழா 13.01.2023 வெள்ளிக்கிழமையன்று சிறப்பாக

நடைபெற்றது. காலை 10 மணி அளவில் மாணவர்களின் இறைவணக்கத்துடன் விழா தொடங்கியது.

விழாவிற்கு வருகை புரிந்தவர்களை பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி ப.பொன்னம்மாள் அவர்கள் வரவேற்றார். பள்ளியின் சென்ற ஆண்டு செயல்பாடுகளை விளக்கும் விரிவான ஆண்டறிக்கையினை பள்ளியின் தமிழாசிரியை திருமதி மா.பானுமதி அவர்கள் வழங்கினார்.

இவ்வாண்டில் பள்ளியின் இலக்கியமன்றச் செயல்பாடுகளை விளக்கும் இலக்கியமன்ற ஆண்டறிக்கையினை பத்தாம் வகுப்பு மாணவி செல்வி அ.மதுமிதா அவர்கள் வழங்கினார்.

சுவிட்சர்லாந்து, ஜெனிவாவில் உள்ள டாய்ச் வங்கியின் இணைத் தலைவர் திரு மகேந்திரன் பொன்னுசாமி அவர்கள் தலைமையேற்று தலைமை உரையாற்றினார்.

விழாவில் புலவர் மானூர் புகழேந்தி அவர்கள் கலந்து கொண்டு மாணாக்கர்களுக்குத் தமிழின் பெருமைகளை எடுத்துரைக்கும் வண்ணம் சிறப்புரையாற்றினார். தவத்திரு குருமகா சந்நிதானங்கள் அவர்கள் ஆசிரியரை அருளினார்.

மாணவர்களின் கண்கவர் கலைநிகழ்ச்சிகள் விழாவிற்கு வருகை புரிந்திருந்த சிறப்பு விருந்தினர்களையும் பெற்றோர்களையும் கவரும் வண்ணம் அமைந்திருந்ததன.

விழாவில் நடனம், பாட்டு, நாடகம், யோகா எனப் பல்வேறு கலை நிகழ்ச்சிகளை மிகக்குறுகிய காலத்தில் பயிற்சி செய்து மாணவர்கள் சிறப்பாக அரங்கேற்றினர். இவ்விழா மாணாக்கர்களின் தனித்திறமைகளை வெளிப்படுத்தும் வகையில் அமைந்தது. விழாவிற்கு சிறப்பாக ஒலி ஒளி அமைப்பு திருமடத்தின் சார்பில் அமைக்கப்பட்டிருந்தது.

இவ்வாண்டு இலக்கிய மன்றத்தின் சார்பாக நடத்தப்பட்ட பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு சான்றிதழ்களும் பரிசுகளும் வழங்கப்பட்டன. பிற்பகல் 2 மணி அளவில் நாட்டுப்பண்ணுடன் விழா இனிதே நிறைவு பெற்றது.

# திருக்குறள் கதை

**செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து**
**ஆற்றின் அடங்கப் பெறின்.**

அறிய வேண்டியவற்றை அறிந்து, நல்வழியில் அடங்கி ஒழுகப்பெற்றால், அந்த அடக்கம் நல்லோரால் அறியப்பட்டு மேன்மை பயக்கும். மூன்று நபர்களுக்கு மரண தண்டனை நிர்ணயிக்கப்பட்டது .மூவரும் தூக்கு மேடைக்கு வரவழைக்கப்பட்டனர். மதத்தலைவர் வழக்கறிஞர் இயற்பியலாளர் முதலில் மதத்தலைவர் கழுத்தில் கயிறு மாட்டப்பட்டது. ‘கடைசியாக ஏதாவது சொல்லவருகிறீர்களா? என் வினவப்பட்டது. ஆண்டவன்! ஆண்டவன்! ஆண்டவன் அவனே என்னை காப்பாற்றுவான் என்றார். மேடை இழுக்கப்பட்டது, மதத்தலைவரின் கழுத்தை நெருங்கிய போது சட்டென்று கயிறு நின்றுவிட்டது. மக்கள் அதிசயத்தோடு பார்த்தனர். அவரை விட்டுவிடுங்கள்! ஆண்டவன் அவரை காப்பாற்றிவிட்டான். என்றனர். மதத்தலைவர் தப்பிவிட்டார். அடுத்ததாக வழக்கறிஞர் அழைத்துவரப்பட்டார். அவர் கழுத்தில் கயிறு மாட்டப்பட்டது. ‘கடைசியாக ஏதாவது சொல்லவருகிறீர்களா? என வினவப்பட்டது. ‘நீதி! நீதி! நீதியே வெல்லும்‘ என்றார். மேடை இழுக்கப்பட்டது, வழக்கறிஞரின் கழுத்தை நெருங்கிய போது சட்டென்று கயிறு நின்றுவிட்டது. மக்கள் அதிசயத்தோடு பார்த்தனர். அவரை விட்டுவிடுங்கள்! நீதி அவரை காப்பாற்றிவிட்டது என்றனர். வழக்கறிஞர் தப்பிவிட்டார்.

அடுத்ததாக இயற்பியலாளர் அழைத்துவரப்பட்டார். அவர் கழுத்தில் கயிறு மாட்டப்பட்டது. ‘கடைசியாக ஏதாவது சொல்லவருகிறீர்களா? என வினவப்பட்டது.எனக்கு ஆண்டவன் பற்றியும் தெரியாது, நீதி பற்றியும் தெரியாது. ஆனால் அங்கே தூக்கு மேடை கயிற்றில் ஒரு முடிச்சு இருக்கிறது. அதனால்தான் கயிறு கழுத்தை பதம் பார்க்கவில்லை என்பது எனக்குத் தெரியும்‘ என்றார். உடனே தூக்குமேடையை பரிசீலித்தனர். அங்கே அந்த தவறு இருந்தது. அதனை சரி செய்தனர். பின்னர் இயற்பியலாளர் தூக்கில் ஏற்றப்பட்டு தலையும் துண்டிக்கப்பட்டது. (நுணலும் தன் வாயால் கெடும்) நீதி: சில சந்தர்ப்பங்களில் அமைதியாக இருக்க வேண்டும் தெரிந்த உண்மைகளையெல்லாம் உளரிக்கொட்டுவதால் உன் கழுத்துக்கே ஆபத்தாகலாம்!
இதனையே திருவள்ளுவர்

**செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து**
**ஆற்றின் அடங்கப் பெறின்.**

## சிரவையாதீனத் தலைவர் பங்கு பெறும் நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 21.02.2023 | செவ்வாய் | சொக்கம்புதூர் மாரியம்மன் திருக்கோயில் நன்னீராட்டு |
| 22.02.2023 | புதன் | பிள்ளையப்பன்பாளையம் மாரியம்மன் திருக்கோயில் நீராட்டு. |
| 23.02.2023 | வியாழன் | மணியகாரம்பாளையம் வெற்றி விநாயகர் திருக்கோயில் நீராட்டு |
| 24.02.2023 | வெள்ளி | வெள்ளோடு நடுப்பாளையம் மாரியம்மன் திருக்கோயில் நீராட்டு. |
| 02.03.2023 | வியாழன் | வெள்ளலூர் இடையர்பாளையம் உமா மகேஸ்வரி திருக்கோயில் வேள்வி.<br>தைலம்பாளையம் சின்னச் செட்டியார்பாளையம் மாரியம்மன் திருக்கோயில் வேள்வி |
| 03.03.2023 | வெள்ளி | சூலூர் குரும்பம்பாளையம் திருக்கோயில் நீராட்டு.<br>பேரூர் மடம் திருக்குட நன்னீராட்டு |
| 09.03.2023 | வியாழன் | விளவை நீராட்டு<br>*கருப்பராயப்பாளையம் மாகாளியம்மன் திருக்கோயில் நீராட்டு. |
| 22.02.2023 | வெள்ளி | காரமடை பொன்னம்மாள் கார்டன் மாணிக்க விநாயகர் திருக்கோயில் நீராட்டு. |
| 11.03.2023 | சனி | செங்குட்டுப்பாளையம் மண்டபம் திறப்பு விழா |

## மாசி மாத திருவிழாக்கள்

| தமிழ் | ஆங்கிலம் | கிழமை | வழிபாடு |
|---|---|---|---|
| மாசி 01 | பிப்ரவரி 13 | திங்கள் | விசாகம்/தேய்பிறை அஷ்டமி (பைரவர்) வழிபாடு) |
| மாசி 06 | பிப்ரவரி 18 | சனி | சனிப் பிரதோசம்/மகா சிவராத்திரி |
| மாசி 08 | பிப்ரவரி 20 | திங்கள் | அமாவாசை |
| மாசி 11 | பிப்ரவரி 23 | வியாழன் | சதுர்த்தி |
| மாசி 13 | பிப்ரவரி 25 | சனி | சஷ்டி |
| மாசி 14 | பிப்ரவரி 26 | ஞாயிறு | கிருத்திகை |
| மாசி 19 | மார்ச் 03 | வெள்ளி | ஏகாதசி |
| மாசி 20 | மார்ச் 04 | சனி | சனிப் பிரதோசம் |
| மாசி 21 | மார்ச் 05 | ஞாயிறு | நடராசர் அபிடேகம் |
| மாசி 22 | மார்ச் 06 | திங்கள் | மகம் |
| மாசி 23 | மார்ச் 07 | செவ்வாய் | பௌர்ணமி |
| மாசி 27 | மார்ச் 11 | சனி | சங்கடகர சதுர்த்தி |
| மாசி 23 | மார்ச் 13 | திங்கள் | விசாகம் |

# கௌமார மடாலயம்,
# அருள்மிகு தண்டபாணிக் கடவுள் திருக்கோயில்
# தைப்பூசத் தேர்த்திருவிழா...









Kaumara Amudham (Tamil Monthly) Periodical - February 2023
Regd. with the Registrar of Newspapers for India under No. Tam 14083/2001.



சத்வித்யா சன்மார்க்க சங்கத்தின் வெள்ளி விழாவில் சிரவையாதீனம்
தவத்திரு கந்தசாமி அடிகளார் தலைமையில் சாந்தலிங்க சாமி பிள்ளைத்தமிழ் அரங்கேற்றம்



அனுப்புதல் : கௌமார அமுதம், கௌமார மடாலயம், சின்னவேடம்பட்டி, கோவை - 49.